


# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

SHIVAJI
TAMIL WEEKLY
31st year
of Publication

11—9—1966


# பாரதியின் பொய்யாப் பாட்டு

— தமிழ்ச்சிவம்

பாருக்குள்ளே நல்ல நாடாய்ப் பாரத நாடு விளங்குகிறதே, அதற்கு ஏது என்ன? மன்னும் இமய மலையா? பன்னரும் உபநிடதங்களா? இன்னறு நீர் கங்கையா? இல்லை, இல்லை. பின்னர் என்ன? அந்த நாட்டிலே தோன்றிய நல்லவர்கள்தாம், நன்னெறி காட்டிய ஞானிகள்தாம். உண்மையில் ஒரு நாட்டின் பெருமை—புகழ்—பீடு எல்லாம் அந்த நாட்டில் விரிந்து உயர்ந்து நிற்கும் மலைகளாலும், பாய்ந்து வரும் ஆறுகளாலும், பல அடுக்கு மாடமாளிகைகளாலும் மட்டும் ஏற்படுவது அன்று. அந்த நாட்டிலே தோன்றிய நல்லவர்களால்—நன்னெறி காட்டிய ஞானிகளால் மிகுந்த பெருமையை அந்த நாடு பெறுகிறது. நம் நாட்டிலே புத்தரும், காந்தியும், நேரும் மகான்களாக விளங்குகிறார்கள். அவர்களால் நாட்டுக்குப் பெருமை; நமக்கும் பெருமை.

புத்தர் புதுநெறி காட்டிய சித்தர். கத்து கடல் சூழ் உலகினிலே முத்தி (முக்தி) பெற்ற எவரும் வணங்குகின்ற தெய்வம் அவர். மன்னும் இமய மலைக்கு இல்லாத பெருமை, பன்னரும் உபநிடத நூற்களுக்கு இல்லாத பண்பு, இன்னறு நீர் கங்கைக்கு இல்லாத புனிதத் தன்மை பொன்னொளி வீசும் புத்தருக்கு உண்டு. அதனால்தான் வெளிநாட்டு நல்லறிஞர் பலரும், பழுமரத்தை நாடிவரும் பறவைகளைப் போல் இப்பரந்த நாட்டை நோக்கி வந்தனர். புத்தர் கொள்கையை, கோட்பாட்டைக் கண்டு, கருத்துக்களை எடுத்துக் கொண்டு சென்றனர்.

முதலாம் நூற்றாண்டிலேயே புத்தமதம் சீன நாட்டில் பரவத் துவங்கிற்று. அது பலரின் உள்ளத்திலும் ஒரு புதிய மறுமலர்ச்சியையும், புத்துணர்ச்சியையும் உண்டாக்கிற்று. அப்பொழுதுதான் சீன மக்கள் புத்தரைப் பற்றி முழுமையாக—மிக விளக்கமாகத் தெரிய வேட்கையுற்றனர். அதன் காரணமாகச் சீன யாத்திரிகன்—பாகியான் கி. பி. 401 இல் இப்பாரத நாட்டிற்கு வந்தான். ஒன்பது ஆண்டுகள் தங்கியிருந்தான். தங்க நிகர் கொள்கைகளை—புத்தர் தம் கோட்பாட்டைத் தாங்கிக் கொண்டு மீண்டும் தன்னாட்டிற்கே போய்ச் சேர்ந்தான்.

அவனுக்குப் பின்னே ஏழாம் நூற்றாண்டில் யுவான் சுவாங் இந்நாட்டிற்கு வந்தான். பௌத்த புண்ணியத் தலங்களை வணங்கினான். வளமார்ந்த புத்தரின் கருத்தினை வாரிக் கொண்டு போய்த் தன்னாட்டு மக்களுக்கு வழங்கினான். அதனால் ஏழாம் நூற்றாண்டிலிருந்து ஒன்பதாம் நூற்றாண்டு வரை புத்த மதம் சீனாவில் வேரூன்றி வளர்ந்தது. இந்த இருபதாம் நூற்றாண்டு வரை அங்கே வளர்ந்த அந்த மதத்தை—கருத்தை மறுக்கிறார்கள். அவர் சிலைகளை உடைக்கிறார்கள்.

இன்று அந்தச் சீன நாட்டுக்கு ஒரு யுவான் சுவாங் தேவை. இல்லை என்றால் அவர்களின் வாழ்க்கையே ஒளியற்ற இருள் கூடமாகப் போய்விடும். பொருளற்ற வாழ்க்கையாக, அவர்களின் வாழ்க்கை அமைந்துவிடும். காலச் சுழலில் அவிந்து விடும்.

புத்தர் யார்? சாக்கிய அரசர். சுத்தோதனருக்கும் மாயாதேவி என்னும் அரசிக்கும் திருமகனாய்த் தோன்றியவர். இத்தரை மகிழ புத்தொளி தந்தவர்; புது வழி காட்டியவர். ஆசியாவின் ஜோதியாய் இருப்பவர் அவரை இளமையில் சித்தார்த்தர் என்றழைத்தனர். பின்னர்—வளர்ந்த பொழுது எந்த மரபின் வழி வந்தாரோ அந்த மரபின் சொல்லமைத்து 'சித்தார்த்த கௌதமர்' என்று கூறத் தொடங்கினர்.

உருவும் திருவும் உரிய பருவமும் உற்ற சித்தார்த்தருக்கு இளவரசப் பட்டங் கட்டினர். காட்சிக்கு எளியராய்க் கடுஞ் சொல்லே இல்லராய் ஆட்சி செய்தார். உயிர்கள் எல்லாம் உறையுமோர் உடம்பும் ஆயினர். பெண்மை எல்லாம் நடம் புரியும் யசோதரையை மணங்கொண்டார். மனையறம் செய்து மக்கட்பேற்றினையும் கண்டார்.

புத்தர் உலகிலுள்ள பிணி, மூப்பு, இறப்பு, வறுமை முதலியவற்றைக் கண்டு கலங்கினர். அவற்றின்றுவிடு பட புதிய வழிகாணத் துடித்தார். அதனால், மனைவி மக்களைத் துறந்தார்; நாடு நகரங்களைக் கடந்தார்; கடும் தவம் புரிந்தார். ஏழாண்டுகட்குப் பின்னர் 'கயா' என்ற இடத்தில் ஓர் அரச மரத்தின் கீழ் அவருக்கு ஞானோதயம் ஏற்பட்டது. அன்றே புத்தரானார். அங்ஙனம் அவர் அரும்பாடு பட்டுக் கண்டறிந்தவை எட்டுக் கட்டளையாகும்.

நற்சாட்சி, நல்லூற்றம், நல்வாய்மை, நற்செய்கை, நல்வாழ்க்கை, நன்முயற்சி, நற்கடைப்பிடி, நல்லோர் தலைப்பாடு இவைகள் அனைத்தும் எட்டுக் கட்டளையாகும். நமக்கு கட்டித் தந்த வாழ்வுப் பெட்டகமாகும்.

இத்தகைய நல்ல பண்புகளை, ஒருவன் பெற்றிருந்தால் அவனின் புகழ் அகிலமெங்கும் மணக்கும். அதற்

[12-ம் பக்கம் பார்க்க]

# தலைக்கு 5 செண்ட் நிலம்

தமிழ்நாட்டை பொறுத்த வரை அடுத்த 5 வருஷத்தில் ஆளுக்கு வீடு கட்ட 5 செண்ட் மனை கொடுக்க ஏற்பாடு செய்து வருகிறோம் என்று காங்கிரஸ் தலைவர் திரு. காமராஜ் சிவகங்கையில் நடைபெற்ற மாபெரும் பொதுக்கூட்டத்தில் கூறினார்.

அக்கூட்டத்தில் திரு. காமராஜ் பேசியதாவது:—

அடுத்த 5 வருஷத்தில் எல்லோருக்கும் வேலை கிடைக்கவும், ஏழைக் குழந்தைகளுக்கு இலவச உணவு, உடை, புஸ்தகம் முதலியனவும் வழங்கவும் ஏற்பாடு செய்து இருக்கிறோம்.

பொருளாதாரத்துறையில் ஏற்றத் தாழ்வை போக்க வேண்டுமானால் நாட்டில் வாழும் 50 கோடி மக்களுக்கும் வாழ்க்கை வசதி செய்து கொடுக்கவேண்டும். இதற்கு அரசாங்கத்திற்கு பணம் அதிகம் தேவைப்படும். ஆதலால், இயற்கை வசதிகளைப் பெருக்கி, நாட்டில் பொருளாதாரத் துறையை பெருக்கவேண்டும்.

காங்கிரஸ் இமயத்தின் உச்சியில் இருக்கிறது. எத்தனை கூட்டணிகள் சேர்ந்தாலும் வரும் தேர்தலில் காங்கிரசை அசைக்க முடியாது என்று கூறினார்.

விலைவாசி ஏற்றத்திற்கு பற்றுக்குறைதான் காரணம் என்றார். அதுவும் கடந்த 3 வருஷங்களில்தான் விலைவாசி ஏறியுள்ளது. விலைவாசி ஏற்றத்திற்கு மக்கள் கையில் பணப் புழக்கம் அதிகம் ஏற்பட்டதும் ஒரு காரணம் என்றார்.

ஜனநாயக நாட்டில் கட்டுப்பாட்டை முழுவதுமாக அமுல் படுத்தவும், தளர்த்துவதும் முடியாது என்றார்.

தி. மு. க. விற்கு தேசபக்தி கிடையாது என்றும், நிலையான லட்சியம் இல்லாதது என்றும் கூறினார். வரியைக் குறைத்து வசதியைப் பெருக்கவேண்டும் என்று சொல்லுகின்ற தி. மு. க. வினரது சென்னை கார்ப்பொரேஷனில் வரியைப் பெருக்கி வசதியை குறைத்திருக்கிறார்கள்.

வரும் தேர்தலில் மக்கள் கட்டுப்பாட்டுடன் காங்கிரசை பலவீனமடைய விடாமல் பார்த்துக்கொள்ள வேண்டும் என்றார் திரு. காமராஜ்.

இக்கூட்டத்திற்கு நகர் காங்கிரஸ் கமிட்டித் தலைவர் திரு. து. சுப்பிரமணிய ராஜகுமார் தலைமை வகித்தார்.

——

## பனி மனிதன்

பனி மனிதன் இருக்கிறானா, இல்லையா என்ற பிரச்னை உலக விஞ்ஞானிகளிடையே வெகுகாலமாக அடிபட்டு வருகிறது.

அண்மையில் 'மாஸ்கோவ்ஸ்கயா பிராவ்தா' என்ற பத்திரிகையில் சுவையான செய்தியொன்று வந்துள்ளது. மேஜர் ஜெனரல் தோபில்ஸ்கி என்பவர், தாம் பனிமனிதனைச் சந்தித்ததை இவ்வாறு வர்ணிக்கிறார்:

'நான் 1925-இல் செஞ்சேனைத் தளபதியாகப் பணியாற்றினேன். அப்போது பாமீர் மலைப் பகுதியில் சில கொள்ளைக்காரர்களை எதிர்த்து நாங்கள் போராடினோம்.

'நாங்கள் கொள்ளைக்காரர்களை வேட்டையாடுகையில், பாமீர் மலைப்பகுதியில் ஒரு பனி மனிதனின் சடலத்தைக் கண்டோம். அவனைக் கொள்ளைக்காரர்கள் கொன்று போட்டிருந்தார்கள். அவன் மாறுவேடத்திலுள்ள ஒரு கொள்ளைக்காரன் என்று நாங்கள் எண்ணினோம்; செத்துக் கிடந்த அவன் உடலைத் தொட்டுப் பார்த்தோம். அப்பொழுதுதான் அது மனிதனைப் போன்ற ஒரு பிராணியென்றும், அப்பிராணியின் உடலெங்கும் ரோமம் அடர்ந்திருப்பதையும் கண்டோம். அருகிலுள்ள கிராமத்தில் விசாரித்தபோது, 'நாங்கள் இதுபோன்ற பிராணிகளை அடிக்கடி சந்தித்திருக்கிறோம்' என்று கிராமவாசிகள் கூறினார்கள்.

'கொள்ளைக்காரர்களால் கொல்லப்பட்ட அந்தப் பனி மனிதனை, நாங்கள் தூக்கி வர இயலவில்லை. ஏனெனில், அந்தப் பனிப்பிரதேசத்தில் நாங்கள் உயிர் தப்பியதே அதிசயம்தான்!'

இவ்வாறு எழுதுகிறார், 1952-இல் பனிமனிதனின் சவத்தைக்கண்ட மேஜர் ஜெனரல். —ஏ. பி. என்.

## நானென்ன? நாயேன்

—R. ஜானகிராமன்

நானென்ன? நாயேன்—
நலங்கெட்டால் என்ன?

எல்லோர்க்கும் நல்லவற்றை
எடுத்தளித்த ஏசுவே
பொல்லாதவன் ஆகிப்
போனானென்றால், இங்கு

நானென்ன? நாயேன்—
நலங்கெட்டால் என்ன?

அடிமைச் சிறைக்கதவை
பொடிசெய்த லிங்கனே
ஆகாதவன் என்று
ஆனானென்றால், இங்கு

நானென்ன? நாயேன்—
நலங்கெட்டால் என்ன?

அன்பே இறைவனென்ற
அண்ணல் நம் காந்தியின்
முன்பே ஒரு பகைவன்
மூண்டானென்றால், இங்கு

நானென்ன? நாயேன்—
நலங்கெட்டால் என்ன?

[சென்றவாரத் தொடர்ச்சி]

சாகுந்தலத்தில்

# துணை நாடக மாந்தர்கள்

மனசை ப. கீரன், பி. ஏ., பி. டி.

## விதூஷகன்

நாடகத் தலைவியன் தோழியரது இயல்புகள் பற்றி இயன்ற பெற்றி கண்டுணர்ந்த பின்னர் நாடகத் தலைவனாய்த் திகழும் துஷியந்த மன்னனின் நெருங்கிய தொடர்பு பெற்ற விதூஷகனின் ஒழுகலாறுகளைக் கண்டு அவனது நலன் - மலன்களைத் தெளிதல் சால் புடைத்தேயாகும்.

## அரசனை விட்டு அகலாமை

விதூஷகன் இரண்டாம் வகுப்புத் துவக்கத்திலே முதன்முறையாகத் தோன்றும் பொழுதே, ஐயோ! வேட்டமாடுவதிலேயேமனம் பற்றியிருக்கின்ற இவ்வரசனோடு சேர்ந்து நான் அலந்து போகின்றேனே.' என்று பெருமூச்செறிந்து சொல்லிக்கொண்டே வருகின்றான். இவன் நாட்டில் மட்டுமன்றிக் காட்டிலும் அரசனுடன்சேர்ந்துஇணைந்திருக்கும் நெருங்கிய பணியாளனாகத் திகழ்கின்றான் என்பது இதனால் இலைமறைகாய்போல் தெளியப்படும்.

## நல்ல நண்பன்

இவன் அரசனின் நண்பர்களில் தலைசிறந்தவன், துஷியந்த மன்னன் தன்னைக் காண வரும் பொழுது, 'என் இனிய நண்பன் வந்து கொண்டிருக்கின்றான்'என்று தனக்குத் தானே சொல்லிக் கொள்கின்றான். தானே அவ்வாறு உணர்ந்து சொல்லிக்கொள்வது மட்டுமல்லாமல், மன்னன் வேட்டையாடுவதிலேயே ஈடுபட்டு அரசியல் அலுவல்களை மறந்துள்ளதைக் கண்டவன், பெரும்பாலும் அரசனுக்கு நகைச்சுவை விருந்தளிக்கவே வாய்த்த இவன், 'நீர் நுமக்குரிய அரசியற் கடமைகளை வகுத்து, இவ் விருண்ட காட்டிற்குள் வேட்டுவனைப் போலத் திரிந்து கொண்டிருக்கின்றீரே!' என்று இடித்துரைக்கின்றான்.

"நகுதல் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு"

என்னும் பொய்யாமொழியின் துலையிலே வைத்துக் காணுங்காலும், நண்பெனுந் தகைமைக்கு நிறை நலன் மன்னியவனாகவே காண்கின்றோம்.

## நடிப்பும் நகைச்சுவையும்

எனினும், இவன் அரசனைப் போன்று அவ்வளவு விளையாட்டுள்ளம் வாய்க்கப் பெற்றவனாகத் தெரியவில்லை. வேட்டையாடும் அரசனைத் தொடர்ந்து செல்வதைத் தொல்லையாகக் கருதுகின்றான். தான் நாட்டைவிட்டுக் காட்டில் வாழும் வாழ்வினை மிகுதியும் வெறுக்கின்றான். இதனை அவன் தோன்றியதும் பேசும் நீண்ட துவக்க உரையிலேயே காணலாம். நாட்டு வாழ்க்கையின் இன்பங்களைத் துய்த்து எளிய வாழ்க்கையினை நுகர்ந்தவன் காட்டுள் இருக்க ஒவ்வாது வீடு மீளத் தவிக்கின்றான்.

அனைத்தினும் சிறப்பாகத் தானே 'என் இனிய நண்பன்' என அழைக்கும் அரசனிடமே கள்ளம் மிக்கவனாய்ப் பொய்யாய் நடித்தும் அத் தொல்லைகளினின்றும் மீள முயலுவது கூர்ந்து நோக்கற்பாலது. அரசன் அவனை நெருங்குங்கால், 'நல்லது, என் உடம்பின் உறுப்புகள் மூட்டு விட்டுப் போனதனால் நொண்டியானது போல் நிற்கின்றேன். இந்தச் சூழ்ச்சியானது நான் இந்தத் தொல்லையினின்றும் விடுபடமாட்டேனா?' என்று தனக்குள் சொல்லிக் கொண்டே ஒரு கோலைப் பற்றிக்கொண்டு நிற்கின்றான். பின்னும் படைத் தலைவனிடம், விதூஷகனின் சொற்படி வேட்டையாடுவதில் எழுச்சி குன்றிவிட்டேன் என அரசன் சொன்னதும், படைத்தலைவன், நண்பனே, நின் சொற்களில் உறுதியாயிரு; இடையே நான் அரசன் மனப்போக்கின்படியே பேசுகின்றேன்' எனச் சொல்லிவிட்டுக் கள்ளப்பொய்யுரையாக பல கூறி நடிப்புரை நிகழ்த்துகின்றான். அப்போது விதூஷகனும் பொய்யாகவே சினந்து, 'கிளர்ச்சியைத் தூண்டிவிடும் நீர் அப்பாற் போம், வேந்தர் பெருமான் தமது இயற்கை நிலைக்குத் திரும்பியிருக்கின்றார். இதற்கிடையில் நீர் வேண்டுமானால் காட்டுக்குக் காடு திரிந்து ஓர் ஆடவன் மூக்கு இறைச்சியைத்தின்ன விரும்பும் ஒரு கரடி வாயிற்பட்டு ஒழியும்'என விரும்பிப்பொய்யுரை புகழ்கின்றான்.

அரசனோ, விதூஷகன் முதலில்வேட்டையாடுதலில் தன் இயலாமையைத் தெரிவித்ததும் சகுந்தலையை எண்ணி அவளை நாடிக் காண விழைகின்றான். அவ்வெண்ணத்திலே அரசனிருக்க விதூஷகன் அரசனின் முகக்குறிகள் எண்ணுவது யாதெனவினவ,'வேறென்ன நண்பனுடைய சொல்லைக் கடக்கக்கூடாதென்று எண்ணிக்கொண்டு வாளா நின்றேன்' என்றான். இவ்வாறு பலரும் அடுத்தடுத்துக் கள்ள உரைகள் கழறுவதைக் கேட்பார்க்கு நகைச்சுவை மிகுகின்றது. இப்படி இவற்றிற்கெல்லாம் அடிப்படையாக வேட்டையாடும் காட்சிப் போக்கினை மாற்றி நகைச்சுவை விருந்து தருபவன் விதூஷகனாக உள்ளமை உன்னி உன்னி உவக்கற்பாலது. அஃதே அன்றியும் அரசனை அவன் தன் அன்னை, வீட்டிற்கு அழைத்து ஆளனுப்ப அரசனோ துறவோர்க்காற்றும் கடமையிலிருந்து வழுவுவதா? அன்றி அன்னையின் ஆணையை மீறுவதா? என விளங்காது விதூஷகனை வினவும்பொழுது, 'திரிசங்கு போல் இடைவெளியிலே தொங்கிக்கொண்டிருமே' என்ற சிரிப்பு முகிழ்க்கும் சொற்கள் சொல்வதும் கருதற்பாலன.

## அரசன் குடியோடு தொடர்பு

இறுதியில், அரசன் 'நீ என் அன்னையாரால் ஒரு பிள்ளைபோற் கருதப்படுகின்றாய்... நீயே அவர்கட்காகப் புதல்வன் கடமைகளைச் செய்து முடிக்கக் கடவாய்' என்பதிலிருந்து அவன் அரசனோடு மட்டுமன்றி அரசனின் குடியோடும் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தமை உய்த்துணரலாம். விதூஷகன் எவ்வளவு அன்பின் உரிமையோடு,'அரசன் தம்பியைப்போல் நான் போன்று, சொல்கிறான்! அன்றியும், அரசன் படையினையும் அவனுடனேயே அனுப்புவதாகச் சொன்னதும் அவன் அப்படியானால், 'நான் இளவரசாயினேன்,' எனச் செருக்குற்று சொல்வதும் எதனையும் உடனே ஏற்றுப் போற்றும் பண்பினையும், அவனுக்கு அரசன்பால் உள்ள அன்பின் உரிமையையுமே பறை சாற்றுகின்றன.

## கோழை

அரசன் சகுந்தலையைக் காண வேண்டுமென அவனுக்கு ஆவல் உள்ளதா

[10-ம் பக்கம் பார்க்க]

# மா சோ-துங்கின் வாரிசு

சீனாவில் மா சோ—துங் காலமான பிறகு இன்றைய பாதுகாப்பு அமைச்சர் லின் பியாவோ சீன அரசியலில் ஓர் முக்கியமான பங்கை எடுத்துக் கொள்வார் என்று சொல்லப்படுகிறது. அண்மையில் சீன கம்யூனிஸ்டு கட்சியின் மத்திய குழு சந்தித்த பிறகு வெளியிடப்பட்ட அறிக்கையில் லின் பியாவோ வருங்காலத்தில் வகிக்கப் போகும் உயர் பதவியைப் பற்றி அறிந்து கொள்ளப் போதிய அறிகுறிகள் காணப்பட்டன.

அதாவது மா சோ—துங், லின் பியாவோ இவ்விருவர்களுடைய பெயர்களைத் தவிர அவ்வறிக்கையில் வேறு ஒருவருடைய பெயரும் காணப்படவில்லை. இப்பொழுது லின் பியாவோ மத்திய குழுவின் முதல் உப அக்கிராசனாதிபதி பதவியை வகிக்கிறார். இப்பதவி மா சோ—துங்குக்கு அடுத்த அந்தஸ்து பெற்றது. தவிர லின் பியாவோ இராணுவ கமிஷனின் அக்கிராசனாதிபதி பதவியை இப்பொழுது ஏற்றுள்ளார். இப்பதவி நாட்டு ராணுவத்தின் முழு அதிகாரத்தையும் இவருக்கு அளிக்கும். மா சோ—துங் இப்பதவியை நீண்டகாலமாக வகித்து வந்தது இங்கே குறிப்பிடத்தக்கது.

1965 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் லின் பியாவோ 'மக்கள் போரின் வெற்றி நீடுழி வாழ்க' என்ற தலைப்புக் கொண்ட ஓர் கட்டுரையை பிரசுரித்தார்.

அக்கட்டுரையில் இன்று, ஆசியா, ஆப்பிரிக்கா, லத்தீன், அமெரிக்கா முதலிய இடங்களில் ஓங்கி வரும் புரட்சி அலைகள் அமெரிக்கா, மேற்கு ஐரோப்பா முதலிய நாடுகளை சுற்றி வளைத்து அழித்து விடும் என்று கூறியிருந்தார். மா சோ—துங்கின் கொரில்லா போர் முறைகளை உலக அரசியலில் பிரயோகிக்க இக்கட்டுரையில் ஆலோசனை கூறியிருந்தார். 1966 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் வெளிவந்த 'இராணுவ விடுதலை சஞ்சிகை' நாட்டு மேதைகளையும், அரசியல் மாற்றக் கொள்கைக்கு ஆதரவளிப் போர்களையும் தாககிக் கட்டுரைகளைப் பிரசுரித்திருந்தது. இப்பொழுது நிகழ்ந்த கலாச்சாரத் துறைப் புரட்சி நிகழ்ச்சிகளுக்கு இச்சஞ்சிகை வித்திட்டது என்று கூறினால் அது மிகையாகாது.

அவ்வாண்டு ஜூன் மாதத்தில் லின் பியாவோ தீட்டிய ஓர் கடிதத்தை சீனப் பத்திரிகைகள் யாவும் அவைகளின் முதல் பக்கத்தில் வெளியிட்டிருந்தன. அக்கடிதத்தில் லின் பியாவோ மா சோ-துங்கின் அரசியல் கருத்துக்களைப் பாராட்டி அவைகளை செயல் முறையில் கையாளுவது நாட்டு முன்னேற்றத்திற்கு இன்றியமையாதது என்று கூறியிருந்தார். அண்மையில் வெளிவந்த 'சிவப்புக் கொடி' என்ற பெயர் கொண்ட கட்சிக் கொள்கை பிரசுரப் பத்திரிகை மா சோ—துங்கின் சேவையையும், அதன் படிப்பினையையும் ஆழ்ந்து கற்றறிந்த லின் பியாவோவின் அறிவுரைகளைப் பாராட்டி ஓர் கட்டுரையைத் தீட்டியிருந்தது. இத்தகைய அறிவுரைகளின் விளைவாக சமீப காலத்தில் கலாச்சார அமைச்சரகத்தில் கையாளப்பட்ட 'கழிவுக்குப்' பின்னர் ஏற்பட்ட காலியிடங்களுக்கு இராணுவ உத்தியோகஸ்தர்கள் நியமிக்கப் பெற்றார்கள்.

மாசோ—துங்கின் போதனைகளுக்குச் சிறந்த விளக்கம் தருபவர் என்றும், கட்சியின் நம்பகமான சிறந்த அங்கத்தினர் என்றும், லின் பியாவோ சமீப காலத்தில் தான் புகழ் பெற்றார். ஓர் 15 மாத காலம்வரை அரசியல் அரங்கில் தலை காட்டாமல் இருந்து விட்டு 1965 ஆம் ஆண்டு மே மாதம் திடீரென்று மீண்டும் இவர் மேடையில் தோன்றினார்.

இவ்வளவு விரைவில் இவர் புகழேணியில் உயர்ந்தது மிகவும் ஆச்சர்யம் விளைவிக்கக் கூடிய ஓர் நிகழ்ச்சி. கம்யூனிஸ நாடுகளில் ஓர் அரசியல் வாதி அரசியல் வானிலிருந்து மறைந்து போனார் என்றால் அவர் கட்சியிலிருந்து அகௌரவப் படுத்தப் பட்டுள்ளார் என்று தான் கொள்ளல் வேண்டும்.

ஆனால், லின் பியாவோவின் மறைவு உடல் நலக் குறைவின் விளைவு என்று கூறப்படுகிறது. 1938 ஆம் ஆண்டிலிருந்து 1942 வரை இவர் மாஸ்கோவில் தனக்குப் போரில் ஏற்பட்ட இரணங்களுக்கு சிகிச்சை பெற்று வந்தார் என்றும், 1951 லிருந்து சில ஆண்டுகள் வரை பெகிங்கில் க்ஷயரோகி சிகிச்சை பெற்று வந்தார் என்றும் தெரிய வருகிறது. 1958 இல் கட்சி செயல் குழுவில் அங்கத்தினராக இடம் பெற்று அடுத்த ஆண்டு பாதுகாப்புத் துறை அமைச்சராக இவர் பதவி பெற்றார்.

கட்சியின் காரியதரிசி பதவி வகித்து வந்த டெங் ஸியாவோ பெங் என்பவர் மிகவும் செல்வாக்குப் பெற்றிருந்தார். கட்சி மத்தியக் குழுவின் அங்கத்தினராகவும், உபப்பிரதமராகவும் இவர் பதவிகள் வகித்தார். நாட்டைக் கம்யூன்களாகப் பிரிப்பதற்கு வேண்டிய திட்டங்களை உருக்கொடுத்தவர். குருஷேவ் எதிர்ப்பு இயக்கத்தில் தீவிரமாகப் பங்கு கொண்டவர். கால அளவில் இவருடைய செல்வாக்கு குறைந்ததின் விளைவாக லின் பியாவோவின் முன்னேற்றம் எளிதாகியது. இவர் முன்னேற்றம் இவ்விருவர்களிடையே அரசியல் கருத்துக்களில் மாறுபாடுகள் இருந்ததனால் எளிதாயிற்று என்று சொல்வதற்கில்லை. மா சோ—துங்கின் கொள்கைகளுக்கு மிக பக்தியுடனும், சிரத்தையுடனும் ஆதரவு காட்டுவதில் இவர் முதலிடம் பெற்றவர்; ஆகையால், இவர் இவ்வளவு விரைவில் முன்னேறியதில் வியப்பொன்றுமில்லை.

மாசோ-துங்கின் மறைவுக்குப் பிறகு சீனாவில் மாறுதல்கள் பல இடம் பெறுவதற்கு வேண்டிய சின்னங்கள் இப்பொழுது காணப்படுகின்றன. 'மக்கள் போராட்டம்' சீனாவின் இன்றைய அரசியல் தத்துவத்தின் சாராம்சம். இத்தத்துவத்தை சர்வதேச அரசியலில் புகுத்த வேண்டுமென்பது லின் பியாவோவின் கனவு. இவர் இன்று மாசோ-துங்குக்கு அடுத்த ஸ்தானத்தில் நியமனம் பெற்றதிலிருந்து 'மக்கள் போராட்ட' தத்துவத்தின் எதிர்காலம் யாது என்பதை எளிதாக ஊகிக்கலாம்.

—

# உணவுப் பஞ்சம்

— வளர்தமிழ் அறிவன்

இன்று நாட்டில் விளைச்சல் குறைவாக இருக்கிறது. பருவ மழை தவறிப் பெய்வதினாலும் மக்கள் பெருக்கம் அதிகமாகி விட்டதாலும் தான் நாட்டில் பஞ்சம் தலை விரித்தாடுகிறது என்று எல்லாரும் எண்ணுகிறார்கள். உண்மையில் பஞ்சம் வாட்டுவதற்கு காரணங்கள் இவைகள் மட்டும்தானா? மேற்போக்கான காரணங்கள் இவைகளாக இருக்கலாமேயன்றி உண்மை காரணம் இவைகளாக இருக்கமுடியாது. எப்படியென்று ஆழ்ந்து சிந்திப்பவர்களுக்குப் புரியும்.

நம் நாட்டில் நீர் வளம் வற்றிவிடவில்லை. விளை நிலங்கள் தங்கள் ஊட்டத்தை இழந்து விடவில்லை. தக்க கவனமும், பொறுப்பும் இல்லாததினாலேயே விளை நிலங்கள் விளைச்சல் குன்றிப் பாழ்பட்டுக் கிடக்கின்றன.

நம் நாட்டில் உள்ள நிலங்கள் பரந்து விரிந்து கிடக்கின்றன. இதில் விளையக்கூடிய நிலங்கள் மிகச் சொற்பமே. அதையும் பொறுப்போடு இருந்து விளைவிப்பவர்கள் மிகமிகக்கொஞ்சமே. அரசியலும் குடியியலும் அரிசியியலில் இருந்து தான் வலுவடைகிறது. அரிசியலில் மந்தம் அடையும் பொழுது மற்றயியல்கள் மங்கிப்போவது எளிது.

இந்த அரிசியியல் நல்ல முறையில் அமைய வேண்டும் என்றால் அதை உற்பத்தி செய்யும் நிலங்களும், உழவர் பெருமக்களும் நல்ல முறையில் இருக்க வேண்டும். இன்று இந்த இருசாராரும் நல்ல நிலையில் இருப்பதாகத் தெரியவில்லை. நிலங்களைப் பொறுத்த வரையில் அரசினரும் சரி மற்றவர்களும் சரி மேற்புல் மேயும் கண்ணோட்டத்தை விட்டு ஆழ்ந்த கண்ணோட்டத்தைச் செலுத்த வேண்டும். ஒரு பண்ணையாருக்குப் பதினாறு பிள்ளைகள் என்றால் பதினாறு பிள்ளைகளுக்கும் பதினாறு பிள்ளைகள் பிறக்கும் பொழுது இருநூற்று ஐம்பத்தாறாகப் பெருகி அத்தனை பங்கு நிலங்களாக துண்டு போடப்படுகிறது. இது பெருகும்பொழுது எத்தனையோ? (!) இயற்கையே கண்டு கண்ணீர் விடும்படியாக இன்றைக்கு நிலங்கள் துண்டு துண்டாக சிதறிக் கிடக்கிறது. ஒவ்வொரு துண்டு நிலத்திற்கும் ஒரே வாய்க்காலில் இருந்துதான் தண்ணீர் வரவேண்டும். வாய்க்காலின் அருகில் இருக்கும் நிலங்கள் தப்பித்து விடும். உள்ளிருக்கும் நிலங்களின் கதி? இவர்களுக்குள் தகராறு மூண்டுவிட்டால் அதோகதிதான். நிலங்களில் பயிரிடப்படும் நெல் மணிகள் குறுகிய பரப்பிற்குள் வளர்ந்து நீர்ப் பற்றுக் குறையால் நல்ல பலன் கொடுக்காமல் திணறுகின்றன.

உழவர்களை எடுத்துக் கொண்டால் இன்றைக்கு உழவர்களாக அவர்கள் இல்லை. ஊழவர்களாக இருக்கிறார்கள். அதாவது விதியின் மேல் பழியைப் போட்டு விட்டு ஒரு துண்டுப் பீடியைச் சுவைத்து இழுத்து விட்டு விட்டு எசமான் என்று கூழைக் கும்பிடு போட்டுக் கொண்டு போய் நிற்கக்கூடிய நிலையில் இருக்கிறார்கள். தான் உழுது பயிரிடும் நிலத்திற்கு எவனோ சொந்தம் கொண்டாடுகிறான், விளைந்தால் என்ன வீணானால் என்ன; கூலிக்குத் தகுந்தாற்போல் ஏர் முனையை நிலத்தில் பதித்தால் போதும் என்ற பொறுப்பற்ற தன்மைதான் தாண்டவமாடுகிறது.

எங்கோ நல்ல வரும்படியில் இருப்பவன் தன் கிரா

[8-ம் பக்கம் பார்க்க]




ஞூ: 31 | ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும் | 1966
இதழ்: 42 | தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே | செப்: 11

# ஆசிரியர் திருநாள்

இந்தவாரம் நாடெங்கும் ஆசிரியர் திருநாள் மிகுந்த உற்சாகத்துடன் கொண்டாடப்பெற்றதுமகிழ்ச்சிக்குரிய தாகும். ஆசிரியர்பணி வருவாய் குறைந்ததாயினும் ஆசிரியர்களின்பால் இந்த நாட்டு மக்கள் கொண்டிருக்கும் நம்பிக்கையும், வைத்துள்ள நன்மதிப்பும் மிகப் பெரிது. சுதந்திரம் வந்த பிறகு, பள்ளிகளின் எண்ணிக்கையும் மாணவர் தொகையும் பெருகியுள்ள அளவுக்கு ஆசிரியர்களின் எண்ணிக்கை பெருகவில்லை. உயர்நிலைப் பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் பயிற்சி பெறாத ஆசிரியர்கள் பலர் பணிபுரியும் நிலை இருந்து வருகிறது.

ஆசிரியர்பயிற்சிக்கல்லூரிகளை ஆதரிப்பதற்கு அரசாங்கம் மிகுந்த அக்கரை கொண்டிருந்த போதிலும், ஆசிரியர்களின் பயிற்சிக் காலத்தைத அதிகரிக்கவும் வேண்டும். ஒரு நாட்டின் சிறந்த குடிமக்களாக மலர வேண்டிய மாணவர்களை உருவாக்கும் பெரிய பொறுப்பை ஏற்கும் ஆசிரியர்கள் திறமைகொண்டவர்களாக இருப்பது அடிப்படை. பயிற்சிக் கல்லூரிகள் போதா என்பதுடன் இருக்கும் கல்லூரிகளிலும் பயிற்சிக்கான போதிய கருவி காரணங்களும் சிறந்த நூல் நிலையங்களும் இல்லையென்று தெரிகிறது. இந்த நிலை மாறுவது மிகவும் முக்கியம்.

மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் வேறுபாடு தெரியாத உடையும் நடையும் ஆசிரியர்பால் காணப்படுவதும் ஒரு குறைபாடேயாகும். ஆசிரியர்களுடைய மதிப்பை உயர்த்தக்கூடிய ஆடைகளும், இதர வசதிகளும் செய்து தரப்பட வேண்டும். ஆரம்ப ஆசிரியராயினும் குறைந்தது மாதம் நூறு ரூபாயேனும் ஊதியம் கிடைப்பது அவசியம். அரசாங்கம் திட்டச் செலவினங்களில் இதற்கு வகை செய்ய வேண்டும்.

நமது மாநிலத்தில் ஆசிரியர்களின் நிலை முன்னேற்றம் பெற்று வருவதுடன், ஓய்வுகால ஊதியம் போன்ற உதவிகளும் பெருமை படத்தக்கனவாகவேயுள்ளன. மதிய உணவு ஏற்பாட்டால் ஆசிரியர்கள்வீண் தொல்லைகளை அடைந்து வருவதை ஆராய்ந்து மதிய உணவுத் திட்டம் நேர்மையாகவும் பயன் தரத்தக்க முறையிலும் நடைபெற மாற்றுவழிகள் காண்பது அவசியம். மாணவர்களின் கல்வியைப் பற்றிய கவனம் குறைந்து மதிய உணவு ஏற்பாட்டை நிர்வகிக்கும் பொறுப்பு ஆசிரியர்கள் மீது சுமத்தப் படக்கூடாது.

ஆசிரியர்கள் திருநாள் நடைபெறுவதன் விளைவாக அவர்களின் நிலைமை உயர்வடையட்டும்.

——

# கண்டங்கள் மிதக்கின்றனவா ?

கடலின் அடித்தளத்தைக் காட்டும் படமொன்றைக் கண்ட அயல்நாட்டு விஞ்ஞானி ஒருவர், ஏதோ ஒரு புதிய கோளின் பரப்பு போன்றுள்ளது என்று கூறினார் அவர் கூறியதற்கும் காரணம் உண்டு. கடலின் அடிப்பரப்பு, சந்திரனில் காணப்படும் வெடிப்புக்களும் மேடுகளும், பள்ளங்களும் நிறைந்துள்ள பரப்புபோலத் தோன்றுகிறது. அண்மையில் ஒரு புகழ்பெற்ற சோவியத் நில ரசாயன வியல் நிபுணர் தனது ஆராய்ச்சிக் கட்டுரை ஒன்றை வெளியிட்டுள்ளார். இதுகாறும் பள்ளிப் புத்தகங்களில் கூறப்பட்டுவந்த பல தத்துவங்களை அவரது கட்டுரை பொய்யாக்கிவிட்டது.

பூமண்டலத்தின் பரப்பு, தோன்றிய விதம்பற்றி அந்த விஞ்ஞானி புதியதொரு தத்துவத்தை முன் வைத்தார். பூமி ஒரு காலத்தில் செஞ்சூடாக இருந்த தென்றும் மெல்ல மெல்ல அது குளிர்ச்சியடையும்போது கனமான பொருள்கள் கீழே சென்று, கனம் குறைந்த பொருள்கள் மேலே 'மிதந்தன' என்றும், அவ்வாறு மிதந்த பொருள்களினாலேயே பூமியின் மேற்புறம் ஆக்கப்பட்டுள்ளது என்றுமே நீண்டகாலமாக நம்பப்பட்டு வந்தது. பூமியைச் சுற்றியுள்ள வாயுமண்டலத்தின் நீராவி குளிர்ச்சியடைந்து, ஆரம்ப காலக் கடல்கள் தோன்றின. அவை தோன்றிய காலத்தில் அவற்றில் சுத்த நீரே இருந்தது. அதன் பின்னர் கடலில் கலக்கும் பலபல நதிகளின் நீர் உப்புக்களைக் கரைத்துக் கொணர்ந்து, கடல்நீருடன் சேர்த்ததால், அந்நீரின் உப்புத் தன்மை அதிகரித்தது. இதுதான் நாம் இதுகாறும் நம்பிவந்த தத்துவம்.

'ஆரம்பகால' விண்கல் ஒன்றை எடுத்து அதை ஒரு விசேஷ கருவியில் அதிக அழுத்தத்தில் உருக்கினார். அந்த உருளையின் ஒரு நுனி முதலில் உருகிற்று. பின்னர், உருகும் பரப்பு மெல்ல மெல்ல நகர்ந்தது. இப் பரிசோதனையில், எளிதில் உடையக் கூடிய பொருள்கள் மறுநுனிக்கு நகர்ந்தன. அதேபோது, அப்பொருளிலிருந்து பலவாயுக்களும் வெளிவந்தன.

பரிசோதனைக்கு எடுத்துக் கொள்ளப்பட்ட 'விண்கல்' லைப் போன்ற பொருளினால் ஆனதுதான் அன்றைய பூமி. ஆகவே பரிசோதனையின்போது நடைபெற்ற நிகழ்ச்சிகள் பூமியினுள்ளும் —ரேடியக் கதிரியக்க வெப்பத்தின் காரணமாக — ஏற்பட்டிருக்கவேண்டும். எளிதில் உருகாத பொருள்களே, அவை கனமானதாக இருக்கவேண்டும் என்பதில்லை — அடியில் தங்கியிருக்க வேண்டும். எளிதில் உருகும் பொருள்கள் மேற்பரப்பில் மிதந்திருக்க வேண்டும். அப்போது வெளிப்பட்டுள்ள வாயுவும், நீராவியும் சேர்ந்து, உப்பு நீர் உண்டாகியிருக்கலாம். ஆகவே, கடல்நீர் ஆரம்ப காலத்திலிருந்து உப்பு நீராகவே இருந்திருக்கக்கூடும் அல்லவா?

அப்படியானால், பூமியின் மையத்தில் — ஆழப் புதைந்துள்ள பொருள் தான் என்ன?

கடலினடியே பல இடங்களிலும் பலகிலோமீட்டர்கள் ஆழமுள்ள பள்ளத்தாக்குகள் உள்ளன. அப்படிப்பட்ட பள்ளத் தாக்கு ஒன்றின் அடிப்பாகம் வரை, ஒரு தூர் எடுக்கும் கருவியைத் தாழ்த்தி, சோவியத் ஆராய்ச்சிக் கப்பலாகிய வித்யாஸ் பரிசோதித்தது. அந்த ஆழத்தில் உள்ள சில

# சோவியத் விஜயம்

— திரு. காமராஜ்

'இந்தியர்கள் பால் சோவியத் மக்கள் கொண்டுள்ள அன்பும் பரிவும்தான், எனது சோவியத் பயணத்தின்போது என் நெஞ்சில் நிலைத்த நினைவுகளாகும், என்று சென்னையில் 'சோவியத் நாடு' நிருபருக்களித்த பேட்டியின்போது திரு. காமராஜ் கூறினர்.

பத்து தினங்கள் சோவியத் யூனியனில் பயணம் செய்து திரும்பிய காமராஜ் மேலும் கூறியதாவது:

'எனது பயணகாலம் மிகக் குறுகியதென்ருலும் கூட — முதன் முதலாக சோவியத் மக்களை நான் சந்தித்தேன் என்ருலும் கூட நீண்டகாலம் பழகிய நண்பர்களிடையே நான் இருப்பது போலவே உணர்ந்தேன். பத்து தினங்களாக, அந்த உணர்வு என்னை விட்டு அகலவேயில்லை. நான் சென்றவிடமெல்லாம் அன்புடன் வரவேற்கப்பட்டேன். சோவியத் மக்களும், சோவியத் தலைவர்களும், ஜவஹர்லால் நேருவிடம் கொண்டுள்ள அன்பும், பெருமதிப்பும் எத்துணை என்பதை நேரில் கண்டால் தான் புரிந்துகொள்ள முடியும். நேருவின் தலைமையில் நமது மக்கள் வகுத்துக் கொண்ட உள் நாட்டு, அயல் நாட்டுக் கொள்கைகளும், அவற்றை நாம் தொடர்ந்து கடைப்பிடித்தலும், சோவியத் மக்களிடையே நமக்குப் பெருமதிப்பையும், அன்பையும் ஈட்டித் தந்துள்ளது தொழிற்சாலைகளிலும், பண்ணைகளிலும்—எங்கணும் சாதாரண மக்கள், இந்திய நாட்டின் கூட்டுச் சேராக் கொள்கையை ஏற்றிப் போற்றுகின்றனர்.

வாழ்வின் எல்லாத் துறைகளிலும் சோவியத் மக்கள் அடைந்துள்ள முன்னேற்றத்தை திரு. காமராஜ் பெரிதும் வியந்தார். 'அந்த நாட்டு மக்களின் வாழ்வு நிலைகளை நேரில் காண்பது, எனது பயண நோக்கங்களில் ஒன்ருகும்.

அரசு மக்களுக்கு வழங்கியுள்ள எல்லா வசதிகளையும் நான் அறிந்துகொள்ள விரும்பினேன். நான் சென்றவிடங்களிலெல்லாம், —கிராமங்களிலும், நகரங்களிலும்—வாழ்க்கைத் தரம் உயர்வாகவே உள்ளது. அனைவரும் எளிதில் கல்விகற்க வசதிகள் உள்ளன. எல்லா மக்களுக்கும் உணவு கிடைக்கிறது. எல்லோரும் திருப்தியுடன் உள்ளனர். சோஷலிசத்தின் கீழ், பெருமளவு பொருளாதார முன்னேற்றம் கண்டுள்ளனர் சோவியத் மக்கள். இந்தியாவிலுள்ள நாம் அவர்களது சாதனைகளிலிருந்து கற்றுக் கொள்ளவேண்டியவை பல உண்டு.

'குடியிருப்புப் பிரச்சினை பெரும் அளவில் சோவியத் யூனியனில் தீர்க்கப்பட்டுள்ளது. குடும்பத்தினருக்குக் கொடுக்கப்பட்டுள்ள பொதுவான ஒரு பெரிய அறையுடன்கூட, ஒவ்வொரு அங்கத்தினருக்கும் ஒரு தனி அறை கொடுப்பதும் தற்போது அவர்களது நோக்கம் என்று மாஸ்கோ நகர மேயர் என்னிடம் கூறினர். ஆண்டுதோறும், மாஸ்கோ நகரில் ஒரு லட்சம் புதிய குடியிருப்புகள் கட்டப்படுவதாகவும் அவர் தெரிவித்தார். வீட்டு வாடகையும் மிகக் குறைவு; அதாவது மாதம் 10 அல்லது 15 ரூபாய்தான்.'

சோவியத் யூனியனில் தான் கண்டனவற்றிலும், கேட்டனவற்றிலுமிருந்து தெரிந்துகொண்ட மிக முக்கியமான படிப்பினைகளில் ஒன்று, நாட்டின் முன்னேற்றத்திற்கு, கட்டுப்பாடான, கடின உழைப்பு அவசியம் என்பதேயாகும் என்று மொழிந்தார் காமராஜர்.

அதிலும், பெருகிவரும் மக்கட் தொகையினரைக் கொண்ட இந்தியாவைப் போன்றதொரு நாட்டில், ஒவ்வொருவரது கடின உழைப்பும், வசதியுள்ளோரின் தியாகமும் இன்றி பொருளாதார சுதந்திரமும், வளமான வாழ்வும் அடைவது சாத்தியமில்லை என்று அவர் கூறினர்.

"இரண்டு மாடிகளைக் கொண்ட ஒரு 'கிண்டர்கார்டனு'க்கு நான் சென்றே 3 வயதிற்கும் 6 வயதிற்கு இடைப்பட்ட குழந்தைகள் 150 பேர் அங்கு பராமரிக்கப்படுகின்றனர். பெற்றோர் வேலைக்குச் சென்றுவிடும் போது, அக்குழந்தைகள் அங்கே தங்கி, கல்வி பெறுகின்றனர். பயிற்சி பெற்ற ஊழியர்கள் குழந்தைகளைக் கவனித்துக் கொள்ளுகின்றனர். கவலையற்ற அக் குழந்தைகளுடன் நான் கழித்த அந்தப் பொழுதை என்னுல் மறக்கவே முடியாது.'' என்ருர் அவர்.

சோவியத் மக்களின் சமாதான விழைவு பற்றிக் குறிப்பிட்டு, "நான் சென்ற நகரங்களில் எல்லாம், எல்லாக் குடும்பங்களிலும், யாரேனும் ஒருவரையேனும் யுத்தம் பலி கொண்டது என்று கேள்வியுற்றேன். எனவே, யுத்தத்தைத் தவிர்க்க சோவியத் மக்கள் பெரிதும் துடிப்புடன் இருப்பதைப் புரிந்து கொள்ள முடிகிறது. அதனுல்தான், உலகமெங்கணும் சமாதானம் நிலவவேண்டுமென அவர்கள் பேரார்வம் கொண்டுள்ளனர். சமாதானத்தை அடைவதற்கான இந்த வேட்கைதான் நம்மிரு நாடுகளிடையே நட்புறவையும், ஒத்துழைப்பையும் பெருக்க அஸ்திவாரம் அமைந்துள்ளது,'' என்று

—

பாறைத்துணுக்குகள் வெளியே எடுக்கப்பட்டு பரிசோதிக்கப்பட்டன. அவற்றில் அரியபல தாதுக்கள் இருப்பது தெரியவந்துள்ளது.

கண்டங்கள் 'மிதக்கின்றன' என்றும், அவை மெல்ல மெல்ல 'விலகிச் செல்கின்றன' என்றும் மற்ருெரு அனுமானம் நிலவி வருகிறது. இவரது அனுமானத்தின்படி தென் அமெரிக்காவும், ஆப்ரிக்காவும் ஒரே கண்டமாக ஒரு காலத்தில் இருந்து, பின்னர் அவை ஒன்றிலிருந்து மற்ருென்று பிரிந்துவிட்டது. கண்டங்களின் உருவங்களும் ஒரே மாதிரியாகவிருப்பது இதற்கு ஆதாரமாகக் காட்டப்படுகிறது.

பூவுலகில், எரிமலைகள், பெரும் வெடிப்புக்கள் ஆகிய பல நிகழ்ச்சிகள் ஏற்படுகின்றன. இவையனைத்தும், பூமியினுள் நூற்றுக்கணக்கான கிலோ மீட்டர் ஆழத்தில் ஏற்படும் நிகழ்ச்சிகளுடன் நெருங்கிய தொடர்புடையவை. அப்படிப்பட்ட பிரதேசங்கள் நூற்றுக்கணக்கான லட்சம் ஆண்டுகளாக அநேகமாக மாருதிருக்கின்றன. கண்டங்கள் 'மிதந்து', 'விலகிச் செல்வதாக' இருப்பின், பூமியின் ஆழத்திலும் மாற்றங்கள் ஏற்பட்டிருக்க வேண்டும். ஆனுல் அது போன்று ஏற்பட்டதாகத் தெரியவில்லை. கண்டங்களின் உருவங்கள் ஒரே மாதிரியாக இருப்பதின் காரணம், கண்டங்களின் கரைகள் ஏற்படுவது பற்றிய பொதுவான விதிகளே ஆகும்.

—

[5-ம் பக்கத் தொடர்ச்சி]

மத்தில் ஒரு துண்டு நிலத்தை வாங்கிப் போட்டு விட்டு, அதை குத்தகைக்கு விட்டு ஏதோ தன் குடும்பச் செலவிற்கு கிடைத்தது போதும் என்று நிம்மதியாக இருக்கிறான். இதற்கு இடைப்பட்ட மக்கள் உழைத்து விட்டு வீடு வந்து சேர்ந்தால் கஞ்சிக்கும் கூழுக்கும் காவடி தூக்க வேண்டிய அவல நிலை கூத்தாடுகிறது.

அரசு நல்ல முறையில் இருக்க வேண்டுமென்று வாழ்த்தும்பொழுது ஔவை 'வரப்புயர' என்று வாழ்த்தினாளாம். ஆனால் அவள் இன்று நம் வரப்புக்களைப் பார்த்தால் தன் சிற்றடி கூட வைக்க முடியாத நிலையில் உள்ள அவ்வரப்புகளைக் கண்டு கண் கலங்குவாள்.

அரசு இன்று நல்ல முறையில் நடக்க வேண்டும் என்றால் உண்மை நிலையை உணர்ந்து தக்க நடவடிக்கையை காலதாமதமின்றி எடுக்க வேண்டும். அதற்கு உரிய வழிமுறைகளை உழவர்களிடம் புகட்ட வேண்டும். துண்டுபட்டு கிடக்கும் நிலங்களை ஒன்று சேர்க்க வேண்டும். உழுபவர்களின் பொறுப்பில் இருக்க வகைசெய்ய வேண்டும். அதில் அவர்கள் பொறுப்பற்று நடந்து கொண்டால் உடனே அதை மாற்றி தக்காரிடம் சேர்க்க வேண்டும். நிலத்தைப் பார்க்கவே கூச்சப்படும் இன்றைய இளைஞர்களின் பராக்குத்தனத்தை களைந்து மேலே நாகரிகம் இருக்கிறது என்று எண்ணாதீர்கள் பண்பட்ட நாகரிகம் கீழ் பூமியில் இருக்கிறது, கொஞ்சம் நிலத்தைப் பாருங்கள்; நீங்கள் நிலையாக நிற்க வேண்டும் என்றால் அதைக் கொஞ்சம் கவனியுங்கள் என்று அவர்கள் கவனத்தைத் திருப்பவேண்டும். பல வீனங்களைக் களைந்து கண்டபடி நிலங்களைப் பாழ்படுத்தாமல் தன் உயிரைப் போல் கவனிக்கும் பழக்கத்தை ஊட்ட வேண்டும். இதற்கெல்லாம் அடிப்படையான நிலையினை புரிய வைக்க வேண்டும். ஔவை சொன்ன 'வரப்புயர' என்பதின் உட்பொருளை ஆய்ந்துதெளிந்து செயல்படவேண்டும்.

வரப்பு எவ்வளவு உயரமாக இருக்கிறதோ அவ்வளவிற்கு நீர் உயர்ந்து நிற்கும். நீர் உயர்ந்து நிற்கும் நிலம் நல்ல முறையில் உழுவதற்கு ஏற்றபடி பண்பட்டிருக்கும். ஏர்கொண்டு உழும்பொழுது ஆழ உழமுடியும். இதனால் நெல் விதைகள் நன்றாக வேர் ஊன்றி வளரும். நிலத்தில் உள்ள ஊட்டம் பயிருக்கு கிடைக்க நெல்மணிகள் நிறைய ஊட்ட நிலையில் கிடைக்கும். அவ்வாறு முற்றிய கதிர்கள் களஞ்சியங்களில் குவியும்பொழுது உழவர்கள் மனம் நிறையும். எஞ்சியது போக மீதியை குடிமக்கள் பெறுவர். குடிமக்கள் பெறும்பொழுது அங்கு வயிற்றின் வாட்டம் ஓட்டம் எடுக்கிறது. வயிற்றுப்பாடு நீங்கிவிட்டால் (தெம்பு) ஊக்கம் பிறக்கிறது. ஊக்கம் பிறந்த உள்ளங்களில் உற்சாகம் கிளர்கிறது. உற்சாகத்தில் சுறுசுறுப்பு பிறக்கிறது. சுறுசுறுப்போடு குடியியல் இயங்கினால் நாட்டில் வாணிபம் செழிக்கும். வாணிபம் செழித்தால் செல்வம் கொழிக்கும். செல்வம் கொழித்தால் அரசு வளம் பெறும். அரசு வளம் அடைந்தால் நாடு நன்னாடாகத் திகழும் என்பதில் ஐயமில்லை.

ஆகையால் அரசியலில் குடியியலும், குடியியலில் அரசியலும் அடங்கிக் கிடக்கிறது என்பதை உணர்ந்து உணவுப் பஞ்சத்திற்கு துண்டு நிலங்களும் துன்புற்ற உழவர்களும் நிறைந்து கிடப்பதே காரணம் என்பதை உணர்ந்து இவற்றைக் களைந்து நிலங்களை ஒரு நிலைப்படுத்தி அதை நல்வழிப்படுத்தி இட்டுச் செல்லும் செயல்முறையை உடனே கொண்டுவர அரசு தயங்கக்கூடாது. அதற்கு வேண்டிய விஞ்ஞான சாதனங்களைப் பயன்படுத்துவதில் தாமதிக்கக் கூடாது என்பதே நல்லன விரும்புவோரின் நோக்கமாகும். அப்படி செய்து விட்டால் விளைச்சலும் அதிகரிக்கும் பஞ்சமும் பறந்தோடிவிடும். நாட்டில் வளப்பமும் செழிப்பும் மேலோங்கும் என்பதை நடைமுறையில் அறியலாம்.

---

## தரையிலும் நீரிலும் செல்லக்கூடிய கார்

நிலத்திலும், நீரிலும் நன்கு ஓடக்கூடிய கார் ஒன்றை உருவாக்கும் வேலை நடக்கிறது.

அது ஹைட்ரோ கார் எனக் குறிப்பிடப்படுகிறது. நிலத்தில் மணிக்கு 75 மைல் வேகத்திலும், நீரில் மணிக்கு 30 மைல் வேகத்திலும் செல்லும் வகையில் அதற்கு வடிவமைக்கப்படுகிறது.

அது சக்கரங்களைக்கொண்ட விரைவுப் படகு போலக் காட்சி அளிக்கிறது. 145 குதிரை திறன்கள் கொண்ட என்ஜின் அந்த ஹைட்ரோ காரை இயக்குகிறது.

அது நீரில் மூழ்காது என்றும், 4 அடி உயரமுள்ள அலைகளையும் சமாளித்து, அதைப் பாதுகாப்பாக ஓட்டிச்செல்ல முடியலாம் என்றும் டிசைன் அமைப்பாளர்கள் கருதுகின்றனர்.

மக்களுக்கு அது உல்லாச சவாரிக்குப் பயன்படும் என்பதுடன் ராணுவத் துறை, மீட்பு வேலை போன்ற பல காரியங்களுக்கும் பயனுள்ளதாக இருக்கும். (நேபன்)

## பெண்களின் கண்கள்

ஆண்களைவிடப் பெண்களின் கண்பார்வை மிகச் சிறப்பாகவும், கூர்மையாகவும் உள்ளது என்று சோவியத் டாக்டர்கள் கண்டுபிடித்துள்ளனர்.

ஒரு வர்ணத்தின் பல்வேறு அழுத்தங்களை, ஆண்களைவிடப் பெண்களே கூர்மையாகக் கண்டுபிடிக்கின்றனர் என்று அவர்கள் ஆராய்ந்துள்ளனர். நெசவாலைகளில் பணிபுரியும் பெண்கள், 200 விதமான சிவப்பு நிறங்களை அடையாளம் கண்டுபிடிக்கின்றனர்; ஆனால், ஆண்தொழிலாளர்களில் மூன்றில் ஒரு பங்கினர் நிற வேற்றுமையைக் கண்டுபிடிக்க இயலாத குருடர்களே! [ஏ. பி. என்.]

---

அரியலூர் டி. மு. கோ.
I. A. 12/66 in S. C. 685/66

ஆரோக்கியசாமி என்கிற ஆரோக்கிய உடையார் —வாதி.

தருமராசன் படையாச்சி —பிரதிவாதி.

ஷெ நெம்பரில் புரோநோட்படி ரூ. 284 கிடைக்க செய்த தாவா 14—9—66ல் ஈரங்கி. அன்று கோர்ட்டில் ஆக்ஷேபணையை தெரிவிக்காவிடில் எக்ஸ்பார்ட்டி தீர்ப்பு செய்யப்படும்.

M. அருள்நந்தி
2/7142/66 அட்வகேட்

---

கரூர் டி. மு. கோ.
E. P. 517/66
குளித்தலை டி. மு. கோ.
S. C. 663/61

K. M. V. நாகமாணிக்கம் செட்டியார் —வாதி.

தற்சமயம் சென்னை புரசவாக்கம் கோவில் தெருவிலுள்ள P. V. தனசாமி செட்டியார் —பிரதிவாதி.

ஜப்தி சொத்தின் ஏல இஸ்தியார் ஷரத்துக்களை நிர்ணயித்து ஏலம்போட 21—9—66ல் வாய்தா. ஆக்ஷேபணையை அன்று காலை 10 மணிக்கு தெரிவிக்கலாம்.

K. முத்துராமலிங்கம்
3/7143/74 அட்வகேட்.

---

## நெரூர் சிவசுப்ரமண்யம் காலமானார்

தேசபக்தரும், சிறந்த சிந்தனையாளரும், எழுத்தாளரும் சர்வோதயத்தொண்டருமான நெரூர் சிவசுப்ரமணியம் அவர்கள் 5—9—66-ல் இறைவன் திருவடிநீழல் எய்தினர். அவருடைய ஆன்மா சாந்தியடைவதாக.

# திரிசங்குப் பண்ணை

— முத்துஸ்வாமி

அந்திரத்தில் காய்கறி வளர்வது பற்றி நாம் அறிந்ததில்லை. ஆனால் அதை நனவில் நடக்கச்செய்திருக்கிறார் தில்லியைச் சேர்ந்த பிரசாத். அவர் தமது வீட்டில் திரிசங்கு பண்ணையொன்று வைத்திருக்கிறார்.

ராணுவத்தில் சுபேதார்-மேஜராகப் பணியாற்றும் பிரசாத்தின் ஐந்து பேர் கொண்ட குடும்பத்திற்கு வாரத்திற்கு ஒரு நாள் இத்திரிசங்கு பண்ணையிலிருந்து காய்கறி கிடைக்கிறது.

பிரசாத் வீட்டு மாடியில் 75 சதுர மீட்டர் பரப்பிற்கு இப்பண்ணை அமைந்திருக்கிறது.

காய்கறி விலைகள் விஷம் போல் ஏறிக் கொண்டே போவதைப் பார்த்த பிரசாத் தமது வீட்டிலேயே காய்கறி பயிரிடத் திட்டமிட்டார். ஆனால் அதற்கு தோட்டம் போட வீட்டிலோ இடமில்லை. மேலே மாடியில் சில மரப் பெட்டிகள், பனையோலை கூடைகள், உடைந்த பானைகள் கிடந்தன. உடனே அவருக்கு ஓர் உதயமாயிற்று. மாடியிலேயே இந்த கண்டான் முன்டான் சாமான்களைக் கொண்டு ஏன் காய்கறி பயிரிடக் கூடாது?

பிரசாத் அந்த உபயோகமற்ற பாண்டங்களில் மண்ணிட்டு நிரப்பினார். பின் மாடிக் கைப்பிடி சுவர்கள் மீது அவைகளை வரிசையாக வைத்தார். மற்றுமிரு சுவர்கள் மீது 20 செ.மீ. உயரத்திற்கு பாத்தி கட்டினார். பின்னர் அவைகளில் விதைகளை ஊன்றினார்.

இவ்வாறு அவரது அந்தரத் தோட்டம் அல்லது திரிசங்குப் பண்ணை உருவாகியது. நான் சென்ற மேயில் இத்தோட்டத்தைச் சென்று பார்த்தபோது இரு மரப்பெட்டிகளில் கத்தரிக் காயும், சிலவற்றில் பீன்ஸும் (சீமை அவரை) காய்த்திருந்தன. சுவர்மீது மண் பரப்பியிருந்த இடத்தில் வெண்டைப் பிஞ்சுகள் காட்சியளித்தன.



பிரசாதின் திரிசங்குப்-பண்ணை

'இது தமிழ் நாட்டிலிருந்து வந்த இளம் கத்தரி ரகம். இதை டில்லி மார்க்கெட்டில் காணமுடியாது. இங்குள்ள சூழ்நிலைக்கு இது நன்றாகத்தான் வளருகிறது,' என்றார் பிரசாத்.



மாடியிலுள்ள சிறிய கோழிப்பண்ணை

ஒரு மரத் தொட்டியில் அவர் கருவேப்பிலைச் செடி நட்டிருந்தார். 'இக் கருவேப்பிலை தில்லியில் ஏக விலை விற்கிறது. சமையலுக்கு கருவேப்பிலை இல்லாமல் முடியாதென்பதால் நான் அதை வளர்க்க வேண்டுமெனக் கருதினேன்' என அத்தோட்டக்காரர் தெரிவித்தார்.

பிரசாத் அத்தோட்டத்திற்கு நீரூற்ற ஒரு நூதன வழியைக் கையாள்கிறார். அவரது குடும்பத்தில் எவரேனும் குளிக்கப் போனால் 'ஷவரு'க்கு கீழே ஒரு தொட்டியை வைப்பார்கள். பாத்திரங்களைக் கழுவும் போதும் கீழே ஒரு வாளி இருக்கும். இப்படி சேகரித்த நீரைத்தான் அவர் தோட்டத்திற்குப் பாய்ச்சுகிறார். தில்லியில் குழாய் நீரைத் தோட்டத்திற்கு உபயோகிக்கக் கூடாது எனத் தடை உண்டு. மேலும் அப்படியே குழாய் நீரைப் பாய்ச்சினாலும் அதற்காக நீர்க் கட்டணம் வேறு செலுத்த வேண்டும். ஆகவே, ஒரே கல்லில் இரு மாங்காய் அடித்தாற்போல் தமது அந்தரத் தோட்டத்திற்கு நீரூற்ற பிரசாத் இந்த நூதன முறையைக் கையாள்கிறார்.

பிரசாத் ஒரு சிறு கோழிப் பண்ணையும் வைத்திருக்கிறார். மூன்று மீட்டர் அகலத்திற்கு மாடியிலுள்ள இப்பண்ணையில் ஐந்து பெட்டைக் கோழிகள் உள்ளன. இவை மாதம் 90 முட்டைகள் தருகின்றன.

'இத்தோட்டத்திலிருந்து மாதத்திற்கு ஐந்து ரூபாய் காய்கறி கிடைக்கிறது. இத்தனைக்கும் நான் ஒன்றும் இதற்கு செலவழிப்பதில்லை. கோழி முட்டைகள் மூலம் ரூ. 18 வருமானம். இதில் கோழிகளுக்கு இரைக்காக ஏழு ரூபாய் செலவழிக்கிறேன்' என்று பிரசாத் கூறினார்.

இப்படியாகப் பிரசாதின் திரிசங்குப் பண்ணையும், கோழிப் பண்ணையும் அவருக்கு மாதந்தோறும் 16 ரூபாய் மிச்சப்படுத்தி தருகின்றன.

## வௌவால்களுக்கு எப்படி இருட்டில் கண் தெரிகிறது?

எதிரொலியைக் கண்டு பிடிக்கும் சக்தி வௌவால்களுக்கு இருப்பதால், அவை மையிருட்டிலும் வழி பிசகாது செல்கின்றன என்று ஆய்வாளர்கள் கூறுகின்றனர். எனினும் இந்தச் சக்தியானது, வௌவாலின் கண், காது முதலிய உறுப்புகளுடன் இணைந்தே வேலை செய்கிறது. மையிருட்டிலும்கூட, பொருள்களின் வடிவை உணர்ந்துகொள்ளும் ஆற்றல், வௌவால்களுக்கு இருக்கிறது.

அவை பறக்கும்போது அசையும் பொருள்களையும், அசையாப் பொருள்களையும் தெளிவாக இனம் காண்கின்றன. ஒரு பந்தை அவற்றின் மீது எறிந்தால், அவை மிகக் கணக்காகத் தப்பிவிடுகின்றன. வௌவால்களைப் பற்றிய இந்த ஆராய்ச்சி, குருடர்களுக்கும் ஒரு வரப்பிரசாதமாக அமையலாம். (ஏ. பி. என்.)

[3-ம் பக்கத் தொடர்ச்சி]

என வினவும் பொழுது அப்பொழுதுதான் வேள்விகளை அரக்கர் அழிப்பதாகச்சொல்லிச் சென்ற துறவோர் புதல்யர் கூற்றினால் அச்சுற்று, "முன்னே கேட்டபோது பார்க்க வேண்டுமெனும் அவா கரை கடந்து ஒழுகியது. அரக்கர்களைப்பற்றிக் கேட்டவுடன் இப்போது அஃது ஒரு துளிகூட இல்லாமற் போயிற்று' என்கின்றான். அவனுக்கு அவா முன்னர் 'கரைகடந்து ஒழுகியது'; இப்போதோ 'ஒரு துளி கூட இல்லாமற் போயிற்று'! இதனை நோக்கும் பொழுது விதூஷகனின் கோழை நெஞ்சம் வாய்த்தவனாய் உள்ளமை தெற்றெனத் தெரிகின்றது.

## உணவுப் பிரியன்

விதூஷகன் உணவில் மிக்க விருப்பம் உடையவனாக உள்ளான். துவக்கத்தில் தனக்குத் தானே பேசிக் கொள்ளும் பொழுதும், உணவைப் பற்றியும் மிகுதியாகப் பேசுகின்றான் : "...உதிர்ந்து அழுகிய சருகுகளில் நிரம்பிக் கசப்பாயும் வெது வெதுப்பாயும் இருக்கும் மலையருவிகளின் நீரையருந்தி வருகின்றோமே! இரும்புக் கம்பியில் கோத்துக் காய்ச்சிய இறைச்சியையே பெரும்பாலும் வேளை தப்பிய வேளையில் உண்டு வருகின்றோமே!" என்றுபல படப்பேசிக் கொள்கின்றான். அரசன் தன்னுடன் ஓர் இனிய நிகழ்ச்சிக்குத் துணையாயிருக்கக் கேட்டுக்கொள்ளும்பொழுதும், "அதென்ன கொழுக்கட்டை தின்பதிலா?" என்றே கேட்கின்றான். படைத் தலைவனைப் பொய்யாகவும் வேட்டையாடி மடியச் சொல்லுங்காலும், "...ஓர் ஆடவன் மூக்கு இறைச்சியைத் தின்ன விரும்பும் முதிய ஒரு கரடி வாய்ப் பட்டு ஒழியும்," என்று தின்னும் தொழிலைக் குறிப்பிட்டே கூறுகின்றான்.

அரசனுக்கு உவளக மகளிரின் சிறப்பையும், துறவாசிரம மகளிரோடு ஒத்திட்டுச் சொல்லும் போதும்,"...பேரீச்சம் பழத்தைத் தின்ற ஒருவன் புளியம் பழத்தை விரும்பல் போல..." என்ற நாச்சுவை உவமையினையே நம் அகக் கண்ணின்முன் கொணர்ந்து நிறுத்துகின்றான். நாடகப் பிற்பகுதியில் அரசன் சகுந்தலையின் நினைவால் மகிழ்ந்திருக்கும் பொழுதும் இவன் தனக்குள்ளாக,"பசியானது என்னை விழுங்கி விடுவது போல் இருக்கின்றதே," என்கின்றான். தேவேந்திரன் அனுப்பிய மாதலி அருவாய் வந்து இவனை அச்சுறுத்தும் பொழுதும், "கருப்பங் கழியைப் போல் என்னை மூன்று துண்டாய் முறிக்கின்றானே," என்றும், "...பூனையாற் பிடியுண்ட சுண்டெலிபோல்..." என்றும், "வேள்விக் களத்து மாட்டைக் கொல்வது போல்..." என்றும் உண்பொருள்களாகவே அடுத்தடுத்து உவமைகளாகக் கூறுகின்றான். இவையெல்லாம் அவன் உணவில் பெரு விருப்பம் கொண்டவன் என்பதனை மிகத் தெளிவாக நிலை நிறுத்துகின்றன வன்றோ?

## உயர்ந்த கொள்கைகள் உறாதவன்

மேலும், துறவொழுக்கத்தால் உயர்ந்த சான்றோர்களை இவன் மதியாதவனாயுள்ளான். இவன் அரசனிடம், "அவள் துறவி மகளாயின் பார்ப்பதிற்பயன் யாது?" என்று சொல்கின்றான். பின்னும், உவளக மகளிரைப் பேரீச்சம் பழத்திற்கும், துறவாசிரம மகளிரைப் புளியம்பழத்திற்கும் ஒப்பிட்டுப் பேசுகின்றான். 'கற்றாரைக் கற்றாரே காமுறுவர்' என்பதுபோல உயர்ந்த ஒழுக்கங்களிற் சிறந்த துறவிகளைப் போற்றாத இவன் உயர்ந்த கொள்கைகள் இல்லாதவன் என்பது ஒருண்மை மொழியே.

## அரண்மனை மகளிரிடை மதிப்பின்மை

மற்றும் அரசன் தன் மனைவி அமிசபதிகையிடம் ஒரு செய்தி கூறச் சொல்ல இவனோ நாணி, "அரம்பை மாதராற் பற்றப்பட்ட முனிவரைப் போல் பிறர் கையைக் கொண்டே என் குடுமி பிடிக்கப்பட்டிருந்ததால் எனக்கதனின்றும் விடுதலையில்லை," என்பதிலிருந்தே இவன் அரண்மனை மகளிரின் மதிப்பிற்கு உரியனாகாமையும் பெறப் படுகின்றது. பாராளும் பெரு வேந்தனோடு இருக்கும் இவன் இத்தகைய இழிதகவிற்கு ஆட்படுகின்றமைக்குக் காரணம் அவன் பால் ஏதாவது குறையிருக்க வேண்டும்.

## மன்னனை ஒத்த உணர்வு வாய்க்காதவன்

அரசன் இவனைத் தன் தாயிடம் அனுப்ப எல்லாம் சொல்லி முடித்த பின்னும், 'யாதொன்றும் தீமையில்லாத சொலும்' வாய்மையிற் சிறந்தவனாக இவன் ஆகாமையாலன்றோ, "இந்தப் பயல் பேதை மதியுடையவனாயிருக்கின்றான்.

யான் சகுந்தலை மேல் விழைவு கொண்டிருத்தலை இவன் ஒருகால் உவளகத்திலுள்ள மகளிருக்குச் சொல்லினும் சொல்லுவான்," எனத் தனக்குள் சொல்லி அறிவுரையாகச் சில சொல்லுகின்றான். எப்பொழுதும் உடனுள்ள இவனிடம் அரசன் பொறுப்பில்லாமையினை உணர்வதினின்றும் விதூஷகனது பேதைமையையும், சொல்வன அளந்தறிந்து தக்கமை சொல்லும் தகைமை சான்றவனல்லன் என்னும் உண்மையினையும் பெறப் பெறுகின்றோம்.

ஆதலினால், இவன் அவ்வளவு சிறந்த பண்பிலன் என்பதும்தெளிவு. பின்னும் சகுந்தலையைக் காணச் செல்ல ஏதாவது ஏதினைத் தெரிவிக்கக் கேட்கும் அரசனுக்கிவன் முனிவரிடம் ஆறிலொரு கூறு கடமை பெறுவதற்குச் செல்லலாமே என்கின்றான். அது செவிமடுத்த அரசன், "ஓ மடவோய்!" என விளித்துத் துறவிகளிடம் அக்கடமை பெறல் தவறென்றும் அவர்கள் இயற்றும் தவத்திலிருந்து பெருங் கடமைக்கே தாம் பெரிதும் கடமைப்பட்டிருப்பதாகவும் கூறுகின்றான். இவ்வாற்றானும் விதூஷகன் தன் தோழனெனவுள்ள அரசனது உணர்வுகளுக்கு ஒத்ததும் ஓங்கியதுமான உணர்வுகளைக் கொண்டோன் அல்லனாகவே தெரிகின்றான்.

[ தொடரும் ]

# வடிவேலர் வருகை

ஆகஸ்ட் மாதம் 27ம் தேதி பகல் 11 மணி. புது தில்லி ரெயில் நிலையத்தில் ஒரே கூட்டம்; தமிழர் கூட்டம். தில்லி மாநகரில் வாழும் தமிழர்களின் முக்கியமான அனைவரும் அங்கே வந்திருந்தார்கள். சிலர் மாலையும் கையுமாக நின்று கொண்டிருந்தார்கள்; சிலர் தெற்கு நோக்கிய விழிகளோடு, நண்பர்களுடன் இனிக்க இனிக்க உரையாடிக் கொண்டிருந்தார்கள். ஆயினும் அனைவரும், அப்போது வந்து சேர வேண்டிய சதர்ண் எக்ஸ்பிரசையே மனத்தினுள் வரவேற்றுக் கொண்டிருந்தார்கள்.

ஆவலோடு அத்தனை பேர், அரசாங்க அலுவலர்களும் சங்கங்களின் பிரதிநிதிகளும் மற்றும் பொது மக்களும் எதிர்பார்த்ததைக் கருதியோ என்னவோ, வண்டியும் அன்று சரியான நேரத்துக்கு வந்து சேர்ந்தது...!

தில்லித் தமிழர்கள் எதிர்பார்த்து நின்ற புதிய விருந்தினர், நெ. து. சுந்தரவடிவேலு தம்பதிகள் சிரித்த முகத்துடன் வந்திறங்கினார்கள். அதிகாரிகள் சுந்தரவடிவேலரைக் கைகுலுக்கி வரவேற்க, தில்லிப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியர்கள் கைகூப்பி வரவேற்க, தில்லித் தமிழ்ச் சங்கம் மலர்மாலை அணிவித்து அண்மையில் வெளி வந்த சுடர் பாரதிதாசன் மலர்ப்பிரதிகளை வழங்கி வரவேற்றது.

மத்திய அரசாங்கத்தின் கல்வி அமைச்சகத்தில் இணை ஆலோசகராகப் (Joint Advisor) பொறுப்பேற்றுத் தில்லிக்கு வந்துள்ள திரு. நெ. து. சுந்தரவடிவேலு அவர்களைத் தமிழகம் நன்கு அறியும். இந்திய அரசும் அவரது கல்வித் துறை நற்பணிகளை நன்கு அறிந்தது. அதன் பயனாகவே பொறுப்பான பதவியை வழங்கி அவரை தில்லிக்கு வரவழைத்துள்ளது. எழுத்தாளர், பேச்சாளர், அரசாங்க அதிகாரி என்னும் பல நிலைகளிலும் சிறப்புற்ற திரு. நெ. து. சு. அவர்களால் தமிழகக் கல்வி இயக்கமே ஒரு புதிய விழிப்பும் சுறுசுறுப்பும் அடைந்தது.

கல்வி நெறியாளர் என்று ஒரு பதவி இருக்கிறது என்ற உண்மையை மக்களுக்கு அறிவிக்கும் வண்ணம் செயல்புரிந்த முதல் கல்வி அதிகாரி இவரே. இவருடைய கல்வித்துறைச் சோதனைகள் தமிழகத்தில் சிலருக்குப் பிடிக்காவிட்டாலும், மரத்துப்போன ஆட்சி எந்திரத்துள் (இன்று மிக மிகத் தேவையான) ஒரு எழுச்சியை உண்டாக்குவதற்கு அவை துணை செய்தன என்பதை யாரும் மறக்க முடியாது. இந்த உண்மையை அறிந்து, அவர் அங்கே பார்த்து வந்த உயர்நிலைப்பள்ளிக் கல்விப் பொறுப்பையே அவரிடம் இந்திய அரசாங்கம் ஒப்படைத்திருப்பது குறிப்பிடத்தக்கது.

மாநில அளவில் தமது சாதனைகளால் பெரும் புகழும் பெற்ற திரு. சுந்தரவேலு அவர்கள் அகில இந்தியக் கல்வித் துறையிலும் பெருவெற்றி நாட்டுவார் என்பதில் அய்யமில்லை. அன்று, அவரையும் அவர் துணைவியாரையும் வரவேற்க ரெயில் நிலையத்தில் வந்து திரண்ட பலதுறைத் தமிழர் கூட்டம் இந்த நம்பிக்கையையே பிரதி பலிக்கிறது.

— 'சாலை'

## திமிங்கிலத்தின் உபயோகம்!

சோவியத் யூனியனில் திமிங்கிலங்கள் பலவிதமாகப் பயன்படுத்தப்படுகின்றன.

நீங்கள் கடையில் பூச்சிக் கொல்லி மருந்தை வாங்கும் பொழுது, அது வெள்ளைத் திமிங்கிலக் கொழுப்பிலிருந்து செய்யப்பட்டது என்பது உங்களுக்குத் தெரியாது!

நோஞ்சானாக இருக்கும் குழந்தைகளுக்கு டாக்டர்கள், விசேட மாத்திரைகளைச் சிபாரிசு செய்கின்றனர்; இவை வெள்ளைத் திமிங்கிலத்தின் மண்டை ஓட்டிலிருந்து தயாரிக்கப்படுகின்றன! ஒருவரது உடலில் முக்கால் பாகம் வெந்துவிட்டால், அவர்மீது விசேட கிருமிநாசினி கொழுப்புத் தடவப்படுகிறது. இக் கொழுப்பு திமிங்கிலத்திலிருந்து எடுக்கப்படுகிறது!

ஸ்டீயரின், ஜெலாடின் என்ற கொழுப்புகளை உற்பத்தி செய்யவும், பூட் பாலிஷ், ஃபேஸ் கிரீம், மேக்அப் சாயங்கள்; இன்சுலின், ஏ. பி. வைட்டமின்கள், டென்னிஸ் மட்டை கயிறுகள், பித்தான்கள், சினிமா பிலிம்கள், விசிறிகள் ஆகியவற்றைத் தயாரிக்கவும் திமிங்கிலங்கள் பயன்படுகின்றன. (ஏ. பி. என்.)

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

## ஓடக்காரா!

கோவை. அ. அய்யாமுத்து

ஓடக்காரா! ஓடக்காரா!
ஓடத்தை இக்கரை கொண்டுவாடா.
பாடித்தினம்புகழ் ஆண்டவனை — உளம்
பார்க்கத்துடிக்குது கொண்டுவாடா [ஓடக்காரா!]

மாடத் தெருவிலோர் ஆடவனை — என்றன்
மைவிழிகண்டு மயக்கியதால் — அவன்
கூடத்தவித்தென்னைக் கெஞ்சுகிறான் — அந்தோ
கூடிவிட்டால்நிலை என்னாகும்? [ஓடக்காரா!]

கூடம் நிறையக் குழந்தைகளும் — அவை
கொஞ்சுங்கரங்களும் நீண்டுவிடும்
கூடுவிட்டாவியும் போகும்வரை — அந்தோ
கொஞ்சாமா தொல்லைகள் சூழ்ந்துவிடும்
[ஓடக்காரா!]

பாடுபட்டுத்தினம் போடவேண்டும் — பல
பட்டினிப்போர்களும் தீரவேண்டும் — பிறர்
ஆடும்படிக்கெல்லாம் ஆடவேண்டும் — பல
அரசியல் சூதுக்குள் ளாகவேண்டும் [ஓடக்காரா!]

பீடும் பிணிகளும் பற்றுமுனர் — பல
பேராசைப் பேய்களும் தொற்றுமுனர்
ஓடத்தை இக்கரை கொண்டுவாடா — என்றன்
ஒப்பற்ற தேவனைச் சேர வேண்டும்.
[ஓடக்காரா!]

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

[1-ம் பக்கத் தொடாச்சி]

...கும் அப்பாலே உயர்த்திச் சொல்லப் படுகின்ற வானுலகிலும் போய் மணக்கும். கந்தம் கமழ்கின்ற கவின் மலருக்கு இல்லாத தன்மை கட்டுச் சந்தன மரத்திற்கு இல்லாத மணம் அந்த உயர்ந்த—நல்ல ஒழுக்கத்திற்கு உண்டு.

பொதுவாக நாம் சொல்கின்ற மணம், மலரிலிருந்தோ, மரத்திலிருந்தோ வருவது. நல்ல குணத்திலிருந்து மணக்கின்ற மணம் ஒருவனைத் தெய்வத்துள் கொண்டு போய் வைத்துவிடும். ஆம், அவனைத் தெய்வமாகவே ஆக்கிவிடும்.

அத்தகைய உயர்ந்த உன்னதமான கொள்கையினைச் சீனன் ஒதுக்குகின்றான். சிலைகளை உடைக்கின்றான்.

எந்தக் கொள்கையினைத் தெரிந்துகொள்ள இந்த நாட்டிற்கு வந்தானோ அந்தக் கொள்கையினை வெறுக்கின்றான். எந்த சாந்தத் திருமுகத்தைக் காண இந்தியாவுக்கு வந்தானோ அந்தத் திருமுகத்தை நொறுக்குகின்றான். தன் தலையிலே தானே மண்ணை வாரிப் போட்டுக் கொள்கிறான். கெடுவதற்காக அவன் கேடு நினைக்கிறான்.

நாடகமேதை சேக்சுபியரின் நாடகங்களை வேண்டாம் என்றும், டால்சுடாயின் கதைகளும் வேண்டாம் என்றும், அவை மனித வாழ்வுக்குப் பயனற்றது என்றும் எடுத்துச் சொல்லிப் பல இடத்திலிருந்து அவர்களின் பாடல்களை எடுத்திருக்கின்றான். அவனுக்குப் பரந்த எண்ணங்கள் பறந்து போய் குறுகிய எண்ணங்கள் கூடி வருகின்றன. புனிதத்தன்மைகள் போய்,—மனிதத்தன்மைகள் போய் மிருகத்தன்மைகளும், பேய்த்தன்மைகளும் நிறைந்து வருகின்றன. இப்படிப்பட்ட இடத்திலா புத்தர் இருப்பார்? எங்கே அமைதியின் சாயல் தவழ்கிறதோ; அங்கே அவர் இருப்பார். எங்கே அழகு பொலிகிறதோ, அங்கே அவர் இருப்பார். அன்பின் உருவம், அவரின் திருவுருவம்; அருள்பொலியும் முகம், அவர் திருமுகம். அறவழி, அவர் நடந்த திருவழி. உள்ளொளி பெற்று அறவழி நடக்க அவர் கொள்கை ஒரு கலங்கரை விளக்கு. அந்தக் கலங்கரை விளக்கை உடைத்தெரிபவன் ஈனன் அன்றோ. அவனைப் பெற்ற நாடு அழுமன்றோ! இன்று அழாவிட்டாலும் என்றாவது ஒரு நாள் அழுதே தீரும்.

'ஈனப் பறையர்களேனும் அவர்
எம்முடன் வாழ்ந்திங் இருப்பவர்
அன்றோ?
சீனத்த ராய்விடு வாரோ' –பிற
தேசத்தர் போற்பல தீங்கிழைப்
பாரோ'

என்று பாரதியார் பாடியுள்ளதைப் பாருங்கள். அவர், அன்று சீனனைப் பற்றிப் பாடிய பாட்டு, இன்னும் பொய்க்காமல் நடந்து வருகிறது. பாரதியார், ஒரு மகாகவி மட்டும் அல்லர். ஒரு பெரிய மகானும் ஆவர். அவர் நினைத்துப் பாடிய அனைத்தும் நாட்டில் நடந்து வருகிறது.

உழவுக்குந் தொழிலுக்கும் வஞ்சனை செய்யாமல், வந்தனை செய்வோம் எனச் சொன்னவர் பாரதி. ஆயுதஞ் செய்யவும் நல்ல காகிதஞ் செய்யவும் ஆலைகள் வைப்போம் என்றார், பாரதி. கல்விச் சாலைகள் வைப்போம் என்றார், பாரதி. தொழில் வளர்ந்தால் நாடு வளரும், பீடுபெறும். இதனை உணர்ந்தவர் பாரதி; உணர்த்தியவர் பாரதி. உணர்த்திய அனைத்தும் இன்று நாட்டிலே நடந்து கொண்டிருக்கின்றன.

'எல்லாரும் அமரநிலை எய்தும்நன்
முறையை
இந்தியா உலகிற் களிக்கும்'
'எல்லாரும் ஓர்குலம் எல்லாரும்
ஓரினம்
எல்லோரும் இந்தியா மக்கள்'

என்று 'பாரதசமுதாயம்' என்னும் பாட்டில் பாடுகிறாரே, அந்த நிலையும் வந்தே தீரும். 'எல்லாரும் அமரநிலை எய்தும்' கொள்கை ஒன்று உண்டென்றால் அது நிகரமைக் (குடியாட்சி சமத்துவக்) கொள்கை ஒன்றுதான். அதன் மூலம் எல்லாரும் எல்லாம் பெற்று வாழ முடியும். இல்லாதாரே இல்லாமல் செய்யவும் முடியும்.

பாரதி பாடிய குமுகாயம் (சமுதாயம்) அமைந்தே தீரும். அவர் பாடிய பாட்டு, பொய்யாப் பாட்டு இன்று மெய்யாகி வருகின்ற பாட்டு. உண்மை ஒன்றுதான் வெற்றி பெறும்; பொய் வெற்றி பெறுவது இல்லை, என்று மறைமுனிவன் கூறிய கூற்று எவ்வளவு உண்மை என்பதனை இன்று கண்டிருக்கின்றோம்; இனிக் காணவும் போகின்றோம். உண்மையான கொள்கை—கோட்பாடு வெற்றியடைந்தே தீரும்.

சீனனைப்பற்றி—சீர்பெறும் தொழிலைப்பற்றிப் பாரதி பாடியவை அனைத்தும் பொய்க்கவில்லை. அது போன்றே பாரதகுமுகாயத்தைப் பற்றிப் பாடியதும் பொய்க்காது. எல்லாரும் சமம் என்னும் காலம் வந்தே தீரும்.









Edited and Published by its owner Sri. Triloka Sitaram & Printed by him at his Shivaji News Printers, 2-A, Fort Station Road, Tiruchy-2.
Annual Subscription Including 4 special numbers Rs. 10.